இராஜபாளையம் கோவிந்தராஜா என்ற

# மகா கோவிந்த சாமிகள் வரலாறு



மகா கோவிந்த சாமிகள்



மகா கோவிந்த சுவாமிகள் ஆலயம்,
கொப்பமாபுரி

# இராஜபாளையம் கோவிந்தராஜா
# மகா கோவிந்த சாமிகள் வரலாறு

ஆசிரியர்
**பேராசிரியர் கொ. பூமிநாதன்,**
AS. வேலாயுதராஜா வேதாந்தப் பாடசாலை

பதிப்பாளர்
**இராம. திலகம்மாள்,**
இராஜபாளையம்

வெளியீடு
கைவல்ய நவநீத ஞானப்பெருமன்றம்
ஐந்தாம் மாநில மாநாடு ஜுன் 3 – 2019
இராஜபாளையம்

# நுழைவாயில்

– பேராசிரியர் கொ.பூமிநாதன்

"தெளிவு குரு உரு சிந்தித்தல் தானே"

என்ற திருமூலர் பெருமானின் வாக்குப்படி குருவின் நாமம் செப்புவதற்கும், திருமேனி காண்பதற்கும் மந்திர உரு ஏற்றுவதற்கும் வரலாறு அவசியம்.

அந்த வரலாறு, சுருக்கமாக, தெளிவாகத் தெரியும் வண்ணம் அருமையும் பெருமையும் உடையதாக எழுதியுள்ளேன்.

மகா கோவிந்தசாமிகள்,

**வருமுன் உணர்பவர்**
**வந்தவரை உபசரிப்பவர்**
**பன்னிய பாவலர்**
**பண்ணவரைப் பணிபவர்**
**விளங்க உரைக்கும் விரிவுரையாளர்**
**ஆசைக்கு அப்பாற்பட்டவர்**
**அரவணைக்கும் அன்பினர்**
**நுண்மாண் நுழைபுலத்தவர் ....**

மகா குரு! மனித தெய்வம்! மாமேதை!

இந்த மூன்று தொடரில் முழுதும் அறியலாம். அவர் வரலாற்றை எழுத அவர் அருளே கூட்டுவித்திருக்கிறது. படிக்க வேண்டும்; நடக்க வேண்டும்.

இதனோடு இணைந்திருக்கும் இரு கட்டுரைகள் இகத்தை உணர்த்தி, பரத்தில் செலுத்தும் பாங்கினது.

திருமதி **பா.இராஜம்மாள்** அவர்கள் மகா கோவிந்தசாமிகளின் அண்ணன் மருமகளார். குடும்ப உறுப்பினர். சாமிகளிடம் உபதேசம் பெற்றவர். குடும்ப உறுப்பினருள் இன்னொரு அண்ணன் மகன் **வேலாயுத கல்யாண வெங்கட்ராமன்** அவர்கள். சாமிகளின் வழியில் வேதாந்தப் பாடசாலை அமைத்து சாமி பெயரில் வேதாந்த வகுப்புகளைப் பல்லாண்டுகளாக நடத்தி வருகிறார். நானும்

பேராசிரியராகத் துணைநின்று, பேச்சாற்றல் பெற்றோரையும், எழுத்தாற்றல் பெற்றோரையும், ஆத்ம போதகரையும் உருவாகும் படி செய்து வருகிறேன். இதை ஏன் எழுதுகிறேன் என்றால், "வேதாந்த வகுப்பில் பாடம் கேட்டதன் பயனே, விளக்கமே இந்தக் கட்டுரைகளை நான் எழுதத்தூண்டியது" என இராஜம்மாள் அவர்கள் குறிப்பிடச் சொன்னார்கள் என்பதால் தான்.

திருமதி பா.இராஜம்மாள் எழுதிய "**ஜீவசொரூபம்**" துறவிகள் பலரால் போற்றப்பட்டுள்ளது. பலர் பாடம் சொல்லும் நூலாகக் கொண்டுள்ளனர். இன்னொரு நூல் "**வேதாந்தச் சொற்களஞ்சியம்;**" தெரியாத சொற்களுக்கு விளக்கம் தரும் நூலாக உள்ளது.

இங்கு இவர் எழுதிய இரு கட்டுரைகளுமே முத்தி தரும் முதன்மைக் கட்டுரைகள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. வரலாற்று நூல் வெளியிட ஆசைப்பட்டு வெளியிட்டவர் திருமிகு இராஜபாளையம் **இராம.திலகம்மாள்** அவர்கள். அவர் வாழ்க!

படிப்போமா? படிக்க வேண்டும்;
நடப்போமா? நடக்கத்தான் வேண்டும்

மகா கோவிந்தசாமிகளின் திரு உரு மலரட்டும்! ஒளிரட்டும்!!

வணக்கம்.

திருச்சிற்றம்பலம்

பேரறிஞர்கள் பலருடைய சிந்தனை, செயற்கரிய செயல்கள் யாவும் அவர்கள் காலத்தில் சிறப்பாக விளங்குவதற்கில்லாமல் அவர்களுக்குப் பிறகு புகழுடம்பாக, ஞான உடம்பாக ஆன பின் தான் போற்றி வழிபடத்தக்க உயர்நிலையை அடைந்துள்ளதைக் காண்கிறோம். எடுத்துக்காட்டாகச் சொன்னால் பாரதியையே சொல்லலாம்.

அவ்வழியில் நம் மகா கோவிந்த சாமிகளின் அருமையும் பெருமையும் அவருக்குப் பிறகு தான் வெளிப்படுகிறது. அவரின் ஆன்மக் கதிர்வீச்சு (ஜீவ ஒளி) பரவி வருகிறது.

- ❖ துறவுக்கு இலக்கணம் சாமிகள்
- ❖ ஆசை சிறிதுமில்லா அன்புளத்தவர் சாமிகள்
- ❖ பல மடாலயங்களைப் புதுப்பித்தவர் நம் சுவாமிகள்
- ❖ மடாலயங்கள் பலவற்றின் தலைவர் நம் சுவாமிகள்
- ❖ பிரம்மவித்தாக வந்து பணிந்தோர்க்கு தேனமுதத் தத்துவங்களை வழங்கியவர் நம் சுவாமிகள்
- ❖ துறவியர் பலரால் 'அத்வைத பானு' என்ற பட்டம் வழங்கப் பெற்றவர் நம் சுவாமிகள்
- ❖ இராமா ஆசிரம சங்கராஸ்ரமத் தலைவர் நம் சுவாமிகள்
- ❖ நூல் பல வெளியிட்ட நூலறி புலவர் நம் சுவாமிகள்
- ❖ கன்னித் தமிழ்க் கவி பல யாத்த அற்புதக் கவிஞர் நம் சுவாமிகள்.

பெருமையடித்துக் கொள்ளாத பெரு ஞானி மகா கோவிந்த சாமிகள் வரலாற்றை நாம் படித்துப் பயன் பெறுவோம்.

**இராஜபாளையம்:**

இந்தியா உலகின் ஞானம் பிறந்த கண்டம் என்றால், மாமுனிவோர் பலர் தோன்றிய, சித்தர்கள் சிறந்திருக்கும் நாடு தமிழ்நாடு. இதில் இராஜபாளையம் ஒரு புண்ணிய பூமி. இராஜபாளையத்தைச் சுற்றிலும் ஊருக்குள்ளும் அற்புதங்கள் பல

நிகழ்த்திய சித்தர் பலர் குடி கொண்டிருக்கும் ஊர். இந்தச் சித்தர்களுக்குக் கோவில் எழுப்பிய நகரம் இராஜபாளையம்.

இந்தப் பெரு நகரத்தில் பாளையம் என்பதற்கேற்ப நான்கு கோட்டைகள் உண்டு. அதில் ஒன்று சக்கராஜாக் கோட்டை. சக்கராஜா என்ற பெயர் பாரத சகாதேவரைக் குறிக்கும்.

சகாதேவர் யார்? சிறந்த ஞானி; வருமுன்னர் வரப்போவதைக் கூறும் வல்லமை உடையவர்; கண்ணனையே அன்பால் கட்டிப் போட்டவர். அவர் பெயர் தாங்கிய கோட்டையில் பிறந்தவர் தாம் நம் சுவாமிகள். நம் சாமிகளும் ஞானியானதில் இராஜபாளையமே பெருமை கொண்டாலும், சாமி தொடர்புடைய ஊர்களும் பெருமையும், பயனும் கொண்டன.

## தோற்றம்:

தோற்றம் என்பது புதிதாகப் பிறப்பதற்குரிய சொல் இல்லை. ஒளி விடும் கதிரவன் போன்று, நிலவு போன்று காட்சி கொடுப்பதையே குறிக்கும். நம் சுவாமிகள் 1908–ஆண்டில் தோன்றினார். கைவல்ய நவநீத வேதாந்தத்தைப் பரப்புதற்காகவே தோன்றினார் என்று சொல்லும்படி, கைவல்ய தாண்டவராய சுவாமிகள் 1408–ஆம் ஆண்டு தோன்றிய ஐந்தாம் நூற்றாண்டிற்கு பின் அதே 8ல் தோன்றினார்.

## தாய் தந்தை:

குமாரராஜா அவர்கள் கைப்பிடித்த இராஜம்மாள் இருவரும் செய்த தவப்பயன் கருவிலே திருவுடைய பிள்ளைகள் பிறந்தனர்.

பிறவி என்னும் கடல் கடக்க நம் சாமிகளின் ஆன்மா, இவர்கள் வாயிலாய் உடம்பெடுத்தது.

## பிறப்பு நாள்:

கீலக வருடம்

1908.08.13

ஆடி மாதம்

29–ஆம் தேதி
வியாழக்கிழமை
துவிதியை (தேய்பிறை)
கும்ப லக்கனம்
சதய நட்சத்திரம்
உதயாதி நாழிகை 31 விநாடி 47
மாலை 6.00 மணி

இராஜராஜ சோழன் பிறந்தது சதய நாள். தஞ்சைக் கோவிலைக் கட்டினான். நம் சாமி மடாலயக் கோவில்கள் கட்டினார்.

கோவிந்த ராஜா என்று பெயர் சூட்டினார்கள். கோவிந்தன் என்ற சொல்லுக்குப் **பரமான்மா** என்று பொருள். எல்லாரும் சமம் என்று ஆன்ம சாதனை செய்யப் போகிறவர்க்கு இந்தப் பெயர் மிகவும் பொருத்தம் அல்லவா!

பக்திப் பரவசத்தில் இராஜபாளையம் மிகச் சிறந்து விளங்கி வந்து கொண்டிருப்பது கோயில்கள், பஜனை மடங்கள் ஆகியவற்றில், பாடியும் ஆடியும் பரவச நிலையில் இறைவனை வழிபடும் காட்சி கண்கொள்ளாக் காட்சி.

இந்த இடங்களுக்கெல்லாம் சாமிகள் சிறுவயதில் செல்வார்; வழிபடுவார்.

**கல்வி:**

தொடக்கக் கல்வி கற்ற சாமிகள் தமிழ், ஆங்கிலம், தெலுங்கு ஆகியவற்றை நன்கு கற்றார்.

இராமலிங்க வள்ளலார் சாமிகள் போல் பள்ளிக் கல்வியை விரும்பவில்லை. ஆன்மீக இலக்கியங்களைப் படித்தார். பகவத் கீதை முதலான வேதாந்த நூல்கள் பலவற்றைப் பயின்றார். சாதுக்களைக் கண்டால் அவர்களிடம் அறவுரைகள் கேட்பார். ஜீவ பிரம்ம ஐக்கியம் என்பதை உணர்ந்தார். கோவிந்தன் என்ற சொல்லுக்குப் **பிரமன்** என்றும் ஒரு பொருள் உண்டல்லவா! பெயருக்கு ஏற்றபடி பிரம்மமாகவே உருக்கொண்டார்.

ஞான நெருப்பு அவரின் உள்ளே கனன்று கொண்டிருந்தது. 18 வயது வரை உள்ளிருந்த நெருப்பு 19 வயதில் வெளிப்பட்டது. தோற்றப் பொலிவும், நெடிய உருவமும், அருள் விழிகளும், அடக்கமும், கொண்டவர் அமைதியையே பெரிதும் விரும்பினார்.

பிறவியைத் தொலைக்க விரும்பியவர் மீண்டும் இல்லறச் சேற்றில் கால் வைக்க விரும்புவரோ? திருமணப் பேச்சு வீட்டில் பேசப்பட்டதுமே, தம் துறவு விருப்பத்தைப் பெற்றோரிடம் கூறி ஒப்புதல் பெற்று கோவிலூர் வேதாந்த மடம் சென்றார்.

**கோவிலூர்:**

காரைக்குடியின் மேற்கு நுழைவாயிலில் உள்ள ஊர் கோவிலூர். சிவன் கோயில் கொண்ட ஊர். அழகிய தெப்பம் கொண்ட ஊர். இயற்கை எழில் கொஞ்சும் ஊர். இரமண மாமுனிவர் 16 வயதில் அண்ணாமலையானை நாடிச் சென்றது போல் சாமிகள் முதல் வேதாந்த மடமான கோவிலூருக்குச் சென்றார். அங்கேயே தங்கினார். ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளின் சீடரானார். சந்நியாச தீட்சையும் பெற்றார். பழைய இல்லற வாழ்விலிருந்து (பூர்வாசிரமம்) விடுபட்டு மறுபிறப்பாகச் சந்நியாசியானார்.

**"அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தார்**
**அகன்றார் அகலிடத்தார் ஆசாரத்தை**
**தன்னை மறந்தார் தன் நாமம் கெட்டார்**
**தலைப்பட்டார் சாமி தலைவன் தாளே"**

என்பதற்கேற்ப குருவின் பெயராகிய மகா தேவ என்பதில் முதல் சொல்லாக மகா என்ற பெயர் சேர்த்து "தீட்சா நாமம்" மகா கோவிந்த சாமிகள் ஆனார்.

**காசி:**

கோவிலூரில் பத்து ஆண்டுகள் பயின்றார். வேதாந்த நூல்கள் அத்தனையும் கற்றார். கற்பிக்கவும் செய்தார். ஆசை அற்றது; மாசு அற்றது.

"உடம்பினைப் பெற்ற பயனாவது எல்லாம்
திடம்பட மெய்ஞ்ஞானம் தேடு"

என்ற ஔவைத் தாயின் அருள்மொழிப்படி மெய்ஞ்ஞானம் தேடினார். வடமொழிப் புலமை பெற விரும்பினார். அதனாலும், காசி விசுவநாதரை வழிபட எண்ணியதாலும் காசிக்குச் செல்ல, குருவிடம் அனுமதி கேட்டார்.

குருவின் வாழ்த்தோடு காசி சென்றார். காசி தீர்த்த தலம், மூர்த்தி தலம், கீர்த்தி தலம் என மூன்றாலும் சிறப்புப் பெற்றது. காசியின் திருக்கோயில்கள் எல்லாம் பணிந்தார்.

**அரித்துவார்:**

சாமியார்களின் புகலிடம் அரித்துவார். தரை இறங்கிய கங்கையின் முதல் வருகைத் தலம். எத்தனை மடங்கள்; எத்தனை கோவில்கள். அங்குச் சென்று தவம் செய்யாத ஞானிகள் உண்டா? கங்கையில் பலகால் முழுகாதவர் உண்டா? காசியில் கடவுளர் வழிபாடு முடித்த சாமி அரித்துவாரம் சென்றார்.

அரித்துவாரில் "கனகல்" என்ற பகுதியில் கங்கைக் கரையில் அமைந்த "ஸ்ரீசூரத்கிரி மகேசுவரானந்தகிரி மண்டலேசுவர சுவாமிகள்" ஆசிரமம் சென்றார். அங்கேயே தங்கினார். ஓராண்டு வடமொழிப் புலமை பெற்றார்; ஆங்கிலப் புலமையும் பெற்றார். தவ பலம் பெற்றார்.

மண்டலேசுவர சுவாமிகள் நம் சாமியின் உறுதி, கொள்கையில் திண்மை, விடாமுயற்சி, எல்லாம் கண்டவர் நம் சுவாமிகளுக்கு, "**கோவிந்தானந்தகிரி சுவாமி**" என்று பெயர் சூட்டினார். மண்டலேசுவர சுவாமியிடம் அனுமதி பெற்று கோவிலூர் வந்து மகாதேவ சுவாமிகள் அடிக்கமலம் சேர்ந்தார்.

**தமிழ்க் கவிஞர்:**

தமிழை நன்கு படித்தவர்கள் கூட, கவிதைகள் எழுத இயலாதவர்களாக இருப்பதைக் காண்கிறோம். சாமி பல கவிதைகள் எழுதியுள்ளார். விருத்தப்பாக்கள் எழுதியுள்ளார். காலக் கண்ணாடியாக அவருடைய கவிதை மிளிர்வதைக் காணலாம்.

திருக்களர் ஸ்ரீ நாராயண ஞான தேசிக சுவாமிகள் பதிகத்திலிருந்து ஒரு வெண்பா.

வெண்பா

சீரார் திருக்களரில் சேரும் சினகரத்தான்
நேரார் நியமத்தான் நிட்டையுளான் – பேராளன்
நாரா யணகுருவின் நற்பதிகம் பாடுதற்குத்
தாராய் விநாயகநின் தாள்.

விருத்தம்

## கொப்பமாபுரி ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் துதி

சீர்மிகுந் திலங்கும் கொப்பமா புரியார்
திருத்தல நடவிநா யகனைத்
தார்மிகும் சண்மு கேசனைப் பதியாம்
சத்தரி ஷீசுர இறையைப்
பேர்மிகும் குங்கு மாம்பிகை அனையைப்
பேணுசின் முத்திரை காட்டும்
தேர்மிகும் ஆதிபரம சற்குருவாம்
தெட்சணா மூர்த்தியைப் பணிவாம்

சாமிகள் கொப்பமாபுரி வருமுன் மடாலயங்கள் பலவற்றின் தலைவராய் இருந்து திருப்பணிகள் பல செய்துள்ளார்.

### முதல் தலைமைப் பணி:

தமிழ் மணக்கும் தஞ்சையில் உள்ளது கரந்தட்டான் குடி என்னும் கரந்தை. இங்கு ஸ்ரீ பாலய ஞான தேசிக சுவாமிகள் ஜீவ சமாதி உள்ளது. இதன் தலைவராய் இருந்தவர் ஸ்ரீ வீர கிருஷ்ண சுவாமிகள். இவர் மூப்படைந்த நிலையில், தம் அடக்கநாள் வருவதை உணர்ந்தார். அதனால் தகுதியான தலைவர் ஒருவரை தலைவராக்க வேண்டும் என்று சாது ஒருவர் மூலம் கோவிலூர் மடாதிபதிக்குத் தூது அனுப்பினார்.

கோவிலூர் மடாதிபதி ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் தலைமைக்குத் தகுதியானவர் மகா கோவிந்த சாமிகளே என்று

முடிவெடுத்தார். அதன் படி கரந்தை பாலய சுவாமிகள் மடத்திற்குத் தலைவராகும் படி கட்டளை இட்டு அனுப்பி வைத்தார்.

சித்திரபானு ஆண்டு ஆவணித் திங்கள் 31–ஆம் நாள் – 16–9–1942 – தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

மடத்தின் கட்டடங்களைப் புதுப்பித்தார். பூசை வழிபாடுகளையும், விழாக்களையும் நடத்தினார். மடலாய வருவாய் வரும் வழிகளைச் சீர் செய்து வருவாய் மிகும்படி செய்தார்.

தஞ்சை கரந்தையின் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்களும் சீடராயினார். துறவிகள் பலரும் சுவாமிகளிடம் பாடம் கேட்டனர்.

**இரண்டாம் மடாலயத் தலைவர்:**
**ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்தயதீந்திர சுவாமிகள் மடம்.**

இத்திருமடம் ஏகாம்பரக்குப்பத்தில் உள்ளது. ஆந்திர மாநிலம் சித்தூர் மாவட்டத்தில் உள்ள ஊர். இந்த ஊருக்கு இன்னொரு பெயரும் உண்டு. குமார வெங்கிடப் பெருமாள் ராஜாப் பேட்டை என்பது. இதைக் கே.வி.ஆர். பேட்டை என அழைப்பர்.

இத்திரு மடத்தை நிறுவியர் காசிவாசி ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள். திருக்களர் ஆண்டவராகிய ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகளிடம் ஞான உபதேசம் பெற்றவர். சாமிகள் வேதத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர். சிறந்த ஞானாசிரியர்.

நம் மகா கோவிந்த சுவாமிகளின் குருவே இவரின் முதல் குரு. திருக்களர் ஆண்டவர் ஆலயம் வந்த போது இரண்டாம் குருவாக ஏற்றுக் கொண்டவர். இந்த இருவருக்கும் சீடரான நம் சுவாமிகள் மடத்தின் தலைவராகப் பொறுப்பேற்றார்.

மூன்றாம் மடாதிபதியாகப் பொறுப்பேற்ற ஆண்டு சர்வதாரி வருடம் புரட்டாசி மாதம் 2–ஆம் தேதி 17–9–1948 வெள்ளிக் கிழமை. மடத்தை நிறுவிய சுவாமிகளின் வரலாற்றை 1986–ஆம் ஆண்டு நம் சுவாமிகள் வெளியிட்டார்.

நெசவுத் தொழிலைப் பரம்பரையாகச் செய்து வரும் முதலியார் குடும்பத்தினர் உதவியுடன் சமாதி ஆலயங்களைப் புதுப்பித்து, புதிதாக, "மகேஸ்வர பூஜை மண்டபம்" கட்டி, குடமுழுக்கும் செய்வித்தார்கள்.

மடத்தில் கைவல்ய நவநீதம் வகுப்பு நடைபெறும். தேவாரம் முழங்கும், சுவாமிகள் தம்மை வணங்கும் சீடர்களைக் "குக பக்தர்கள்" என்று அழைப்பார். சாமிகள் இங்குச் சமாதி ஆகாததால் இவரின் படத்திற்கு வழிபாடு நடைபெறுகிறது. சாமிகளிடம் நேர்த்தி கடன் செய்வர். நிறைவேறியதும் காவடி முதலியன எடுப்பதை நாங்கள் கண்டோம்.

6.2.2009–ஆம் ஆண்டு வெள்ளிக்கிழமை ஜீரோத்தாரண மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. அதே நாளில் மகா கோவிந்த சாமிகளின் நூற்றாண்டு விழா இராஜபாளையம் AS வேலாயுத ராஜா வேதாந்தப் பாடசாலை உறுப்பினர்கள் கலந்து கொண்டு நடத்தி வைத்தனர்.

சிறப்பாக இம்மடத்தை நடத்தி வந்த நம் சுவாமிகளுக்கு, ஆந்திர மாநிலத் துறவிகள் "**அத்வைத பாநு**" என்ற பட்டமளித்துப் போற்றினர்.

## மூன்றாம் தலைவர்:

தஞ்சை கரந்தை ஸ்ரீ பாலய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத் தலைவராய் இருந்து கொண்டிருந்த ஸ்ரீ மகா வாசுதேவ சுவாமிகள் 1956 டிசம்பர் மாதம் விதேக முத்தி அடைந்து விட்டார்கள். அதனால் இம்மடத்தின் பொறுப்பை மீண்டும் ஏற்றுத் திருப்பணி செய்தார்.

## நன்னிலத் திருப்பணி

நன்னிலம் திருவாரூரின் அருகில் உள்ளது. பாடல் பெற்ற திருத்தலம். ஆறு வளைந்தோடி அழகிய நன்செய் நில வளத்தைச் செய்யும் ஊர். நன்னிலம் என்றாலே நன்செய் என்ற பொருள் உண்டு. அறிவு சார் பெரியோர்களும் அன்பு சார் மக்களும் வாழும் ஊர்.

இந்த ஊரைச் சேர்ந்த ஞானி தான் நாராயண குரு. இவரின் சீடர் தாண்டவேசுவரர். (ஆடலீசன் பெயர்) குரு மொழி கேட்டு, சிந்தித்து, உருவாக்கியது தான் கைவல்ய நவநீதம். வேதாந்த நூல்களில் தனிச்சிறப்புப் பெற்ற தமிழ் உபநிஷத். முத்தி பெற வெண்ணெய் போல் மென்மை, இனிமை உள்வாங்க எளிதாக வழிகாட்டும் இனிமையால் கைவல்ய நவநீதம் என்ற நூலை மிக மிக விரும்பிப் பாடம் சொல்லும் நம் சுவாமிகள் இயற்றியவரையும், குருவையும் மிக வணங்குபவர்.

குருவுக்கும் சீடர்க்கும் ஒரே இடத்தில் ஒரே ஆலயமாக சமாதிகள் உள்ளன. இந்த ஆலயம் பாழடைந்து போற்றுவாரின்றி இருந்தது. இதைக் கேள்விப்பட்டு வருந்திய மகா கோவிந்த சாமிகள் புதுப்பிக்க விரும்பினார். அதனால் பாலய சுவாமிகள் கரந்தை மடத்துப் பொறுப்பை ஸ்ரீ மு.கோ. கிருஷ்ண சாமிகளுக்கு 13.12.1959 ஆம் நாள் எழுதி வைத்து விட்டுப் புறப்பட்டார்கள்.

## அறநிலையத் துறை:

நன்னிலம் சமாதி ஆலயம் இந்து சமய அறநிலையத் துறையின் பொறுப்பில் இருந்தது. சாமிகள், ஆணையரை அணுகினார். சாமிகளின் தோற்றப் பொலிவைக் கண்ட அந்த நாள் ஆணையர் திருப்பணிக் குழுத் தலைவராக நியமனம் செய்தார்கள். மேலும் நிதியுதவியும் செய்தார்கள்.

## மடப்புரம் ஸ்ரீ தட்சிணாமூர்த்திகள் திருமடம்:

திருவாரூரில் உள்ளது மடப்புரம், தட்சிணாமூர்த்தி சுவாமிகள் மடம் இன்றும் அப்படியே இருக்கும் தன் உடம்போடு ஜீவ சமாதியாகி அருள்பாலித்து வருகிற மடம். இங்கே சாமிகள் தங்கி, நாள்தோறும் நன்னிலம் ஆலயத் திருப்பணியை மேற்கொண்டார்கள்.

## கொப்பம்பட்டி:

நன்னிலம் ஆலயத் திருப்பணிக்காகப் பலரிடம் நன்கொடை பெற்ற சாமிகள் கொப்பம்பட்டி பெரிய பண்ணை நடராஜ ரெட்டியார் ருக்மணி அம்மையாரைச் சந்திக்க வந்தார்கள். சாமிகளின் பண்பு நலன்களை அறிந்த தம்பதியர் தங்களுக்கு அத்வைத பாடம் கற்றுத்

தர வேண்டினார்கள். திருப்பணி முடித்தவுடன் வருவதாக அருள் செய்தார்.

### ஆலயக் குடமுழுக்கு:

நன்னிலம் குரு சீடர் சேர்ந்தடங்கிய ஆலயத் திருப்பணி மிக முக்கியத்துவம் வாய்ந்தது. வடக்கு முகமாகத் தென்புறம் அமைந்த சமாதிகளைப் பெயர்த்தெடுத்தார். (யாரால் முடியும்?) கிழக்கு முகமாக அமைத்தார். அழகிய கற்கோவிலாக உருவாக்கினார். பலரும் வணங்கும் வகையில் அமைத்தார். கைவல்ய நவநீத நூலை வகுப்பாக நடத்த கைவல்ய நவநீத வகுப்பறை மண்டபம் கட்டி முடித்தார்.

1968 ஆம் ஆண்டு செப்டம்பர் 4 ஆம் நாள் குடமுழுக்கு மிகச் சிறப்பாக நடைபெறச் செய்தார். இன்றும் நாராயண குரு தாண்டவேசுவரர் குரு பூசை சிறப்பானதொரு விழாவாக நடைபெற்று வருகிறது. விழாக்கள் நடைபெற ஒரு மகா மண்டபம் அனைத்து வசதிகளுடனுடம் கட்டப்பட்டு வருகிறது.

### கொப்பம்பட்டி (எ) கொப்பமாபுரி

தாம் வாக்களித்தபடி ஞானத் தாகம் கொண்ட நடராஜரெட்டியார் ருக்குமணி அம்மாள் ஆகியோர்களுக்கு "ஞான தானம்" செய்வதற்கு 8.6.1970 ஆம் நாள் திங்கள் கிழமை கொப்பமாபுரி வந்தார்கள்.

தனிமையே இனிமேல் இனிமை என தியானம் செய்ய அங்கேயே தங்கினார்கள். சுவாமிகள் உடலோடும், பிரிந்த ஆன்ம உருவிலும் என்றும் அங்கேயே கோவில் கொள்ள "இராம ஆசிரமம்" கட்டினார்கள். ருக்மணி அம்மையாருக்காக "சங்கர ஆசிரமம்" அமைத்தார்கள்.

சுவாமிகளிடம் பாடம் கேட்டுப் பயன்பெற சுற்று வட்டார ஆர்வலர் பலர் வந்தார்கள். பாடம் கேட்டார்கள். இவர்கள் அனைவரிலும் அணுக்கத் தொண்டராய் நூற்றாண்டு விழாக்கள் நடத்தத் தூண்டிச் செயலாற்றிய **முத்தமிழ்ப்பண்ணை பா.அரங்கராசன்** அவர்கள் ஆவர். சாமிகளை அத்தம்பதியர் மறைந்த

பின் யசோதை அம்மாள் கவனித்து வந்தார்கள். இன்றும் இராமா ஆசிரமத்தில் சாமிகளோடு மூவருக்கும் நித்திய பூசை நடைபெற்று வருகிறது.

**விதேகமுத்தி:**

மூப்பின் காரணமாக சாமிகளின் உடல்நலம் குன்றியது. ஆன்மாவிற்கு ஏது மருத்துவம்?

பிரஜோத்பத்தி வருடம் ஆடி மாதம் 14–ஆம் நாள் தேய்பிறை சதுர்த்தி திதி பூரட்டாதி நட்சத்திரத்தில் 30–7–1991–ஆம் நாள் பொன்னுடலை உதறி, ஆன்மாவை இராமாசிரமத்தில் ஐக்கியமாக்கினார். இன்றும் குரு பூசை சிறப்பாக நடைபெற்று வருகிறது.

**சாமிகளின் பண்புநலன்கள்:**

1. மகா கோவிந்த சாமிகள் சந்நியாச தீக்கை பெற்ற பிறகு பிறந்த ஊருக்கு வந்ததில்லை. இது துறவிக்குரிய இலக்கணம். பெற்றோர் உறவைப் பற்றி விசாரித்ததும் இல்லை.
2. சாதி வேறுபாடு கருதாதவர். படித்தவர் படிக்காதவர் அறிவாளிகள் அறிவிலிகள், ஏழை பணக்காரர் முதலிய வேறுபாடு கருதாமல் அனைவரிடமும் உரையாடுவார்.
3. பலர் உடம்பையே "நான்" என்று பலரின் உடம்பொடு உரையாடுவர். நான் ஆன்மாவையே நான் என்று கருதுவதால் அடுத்தவர் ஆன்மாவோடு உரையாடுவேன் என்று ஆன்ம சாதனை செய்தவர்.
4. பலருக்கும் இனிய பேச்சு, பசிக்கு உணவு, வேண்டிய உதவிகள் செய்யும் ஞானப் பண்பினர்.
5. படிக்கும் நூல்களில் குறிப்புகள் எழுதுவார்.
6. சிருங்கேரி பீடாதிபதி, துறவிகள் முதலியோரை வரவேற்று வழிபட்டவர்.
7. இறைக் காட்சிகளை வருமுன்னர்க் கண்டவர்.

8. நூலை மனப்பாடம் செய்த பிறகே பாடம் நடத்துபவர்.

9. எளிமையான பண்புடையவர்; தன் பெயரில் எந்த ஒரு சொத்தும் கூடாதென வாழ்ந்தவர்.

10. சாமிகளின் தன்னலமற்ற தொண்டினால் யாருக்கும் கிடைக்காத சிறப்பாக, ஒன்பது ஊர்களில் நூற்றாண்டு விழா நடந்தது.

ஞானப் பனுவல்கள் பல படித்தவர். தம் குருமார்களுக்கு வணக்கம் தெரிவிக்கும் கவிதை நூல்கள் இயற்றி வெளியிட்டார். வேதாந்த நூல்கள் பல வெளியிட்டார். அவற்றிற்கு முன்னுரையும் எழுதியுள்ளார். கற்றபடி வாழ்ந்து வழிகாட்டிய கலங்கரை விளக்கம் நம் சுவாமிகள்! அவர் அருளை என்றும் பெறுவோம்; அவர் வழி நடப்போம்; போற்றுவோம்.

மகா கோவிந்த சுவாமிகள் திருவடி போற்றி.

## தத்துவமலர்கள்

# மாயையின் நிவர்த்திக்கு உபாயம்

# அத்வைத ஞானாமிர்தத்தின் சில துளிகள்



**பா.இராஜம்மாள்,**
இராஜபாளையம்

**A.S.வேலாயுத ராஜா வேதாந்தப் பாடசாலை**
இராஜபாளையம்

# மாயையின் நிவர்த்திக்கு உபாயம்.

– பா. இராஜம்மாள்

காரண காரியங்களின் பேதம் கற்பிதம். வாஸ்தவம் அபேதமாம்
ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு.

சத்குரு ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளிய கைவல்ய நவநீதம் என்ற நூலிற்கு தவத்திரு ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் கருத்துரை செய்து திருஷ்டாந்த தாஷ்டாந்தத்தோடு விளக்கியிருக்கிறார்கள்.

காரணமான மாயையின் நிவர்த்திக்குத் காரியமான திருஷ்ய விஸ்மரணத்தால், அதாவது நாம ரூபமான ஜகத்தின் திருஷ்ய விஸ்மரண ரூப காரியத்தால் காரணமான மாயா சக்தி நிவர்த்தி கூடும்.

அது எப்படியெனில், அக்கினியில் உள்ள தாக சக்தி, மணி மந்திர ஒளி சாதிகளால் எப்படிக் கட்டுப்படுத்துகிறதோ, அப்படி காரியமான ஜகத்தின் திருஷ்ய விஸ்மரணத்தால் காரணமாகிய மாயா சக்தி நிவர்த்திக் கூடும்.

எது போல எனின்?

சந்தேகம் தெளிதல்படலம், கவி 103.

**மேவும் மண்ணில் அவ்வியத்தமே வியத்தமாம் விவகரித்திட வேண்டில்**
**நாவினால் மண்ணைக் குடம் என்பர் அக்குடம் நசிப்பதும் நாவாலே**
**பாவும் நாம ரூபங்களை மறந்து மண் பார்ப்பதே பரமார்த்தம்**
**ஜீவ கற்பிதங்களை மறந்து நீ சின்மயன் ஆவாயே.**

**கருத்துரை:-** திரளையான மண்ணில் குலால வியாபாரத்திற்கு முன், வெளிப்படாததாக இருந்த கடசக்தியே, குலால வியாபாரத்திற்குப் பின் கடம் என்ற நாம ரூபமாக வெளிப்பட்டது. அது போலச் சிருஷ்டிக்கு முன் அவ்யாகிருத நாமமுடையதாய் இருந்ததே இந்த ரூபங்களாகப் பிரகடமாயின. இங்ஙனம் கூறிய பிருகதாரண்ணிய சுருதியின் தாத்பரியம் காரிய காரணங்கள்

அபேதமாகலின், காரியமான திருஷ்ய விஸ்மரணத்தால் காரணமான மாயை நிவர்த்தித்துப்போம் என்பதாம்.

சக்தியின் காரியமான கடம் மித்தை. சக்திக்கு ஆதாரமான மண் சத்தியம் என்னும் சாந்தோக்கிய சுருதியின் பொருளை இன்நூல் ஆசிரியர் தொகுத்துக் கூறுகின்றார்கள். விவகரித்திட வேண்டின், வாக்கினால் (மண்ணைத் தவிரக் கடமின்மையினால்) மண்ணைத் தானே கடமென்று விவகரிப்பர். அக்கடம் நசித்தது என்னும் வியவகாரமும் வாக்கு மாத்திரத்தாலேயுளதான்.

இப்படிக் காரியமான கடம் உபாதான காரணமான மண்ணைத் தவிர வேறின்மையின் உண்டென்பதும், நசித்ததென்பதும், வாக்கு மாத்திரமாதலால் சக்தியின் விரிவாகும் கடமென்னும் நாமமும்,

(பிருது புத்நோதரா காரமான) உருவமும்
பிருது = ஸ்தூலம். புத்நம் = வட்டவளைவு. உதரம் = வயிறு.
ஆகாரம் = வடிவம்.

ஆகிய இவைகளை மித்தையென்று உபேட்சித்து, ஆகாசமென்பது முதலிய நாமமும், அவகாசம் என்பது முதலிய உருவமும், அஸ்திபாதி பிரிய ரூபமான பிரஹ்மத்தைத் தவிர வேறின்மையின் ஜகத் என்பது வாக்கு மாத்திரமாம். ஆகலின் சீவத்துவிதமாகிய (நாம ரூபம்) சீவ பேத கற்பிதங்களை (கற்பனைகளை) மறந்து மித்தையென்று உபேட்சித்து நீ சதானந்த சின்மயனாவாய் என்பதாம்.

## தாஷ்டாந்த ஞானத்தின் பொருட்டுத் திருஷ்டாந்தத்தின் விளக்கம் :

பிருது புத்நோதரா காரமான கடம் காரியம். சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரசம், கந்தம் முதலிய ஐந்து குணங்களோடு கூடிய மண் ஆதாரம். சக்தி இவ்விரண்டிற்கும் விலட்சணம் (வேறு). எப்படியென்றால் – சக்தியின் கண் பிருது புத்நாதி காரிய தர்மமும் இல்லை. சத்தம் முதலான காரண தர்மமும் இல்லை. காரண சொரூபத்தினும் பின்னமாக சக்தி இருக்குமானால் காரண சொரூபம்

போல் ஏன் தோன்றவில்லை என்றால் மண்ணின் சக்தி கடாதி காரிய உற்பத்திக்கு முன் மண்ணில் அவ்யக்தமாக (அடங்கி) இருக்கிறது. நவநீதம் முதலியவைகளை மதனத்தால் தோற்றுவது போலக் குலாலாதிகளின் சகவாசத்தால் கடாதியாகாரத்தை அடைகின்றது. உபாதான காரணத்தினும் பின்னமாக சக்தியின் காரியம் உண்டென்றால் காரிய காரணங்களின் பேதம் ஏன் தோன்றவில்லை என்றால் ?

அவிவேக ஜனங்கள் கடாதி காரியத்தையும், சத்த பரிசாதி குணரூபமான காரண பூதமாகிய மண்ணையும் ஒன்றாகச் சேர்த்துக் கடம் என்று சொல்லுவதால் காரிய காரண பேதம் தோன்றவில்லை.

மாயையின் காரியமாதலால் கடாதி விகாரங்கள் மித்தை என்றும், விகாரங்கட்காதாரமான மண் மாத்திரம் சத்தியம் என்று சுருதி கூறுகின்றது.

இதற்கு அபிப்பிராயம் ஏதெனின் ?

சத்தியும் காரியமும் ஒவ்வோர் காலத்தில் தோன்றுவதால் மித்தை. ஆதாரம் மூன்று காலத்தினுமிருப்பதால் சத்தியமாம் என்பதாம்.

**காரியம் மூவகை ஹேதுக்களால் அசத்தியமாம்.**

அவைகள்,

1. அசத்தாய் தோற்றுகின்றதும்.
2. உற்பத்தி நாசமுடைத்தாய்க் காணப்படுகின்றதும்.
3. உற்பத்தியான பின்னர் வாக்கிந்திரியத்தால் ஜனிக்கின்ற நாமஸ்வரூபமாக வியவகரிக்கப் படுகின்றதுமாம்.

காரிய காரணங்களின் பேதம் கற்பிதம். வாஸ்தவம் அபேதமாம். ஆதலால் பூத பௌதிக ரூபமான சர்வ வஸ்துக்களிலும், காரியத்தின் மித்தியாத் தன்மையை அடிக்கடி அனுபவித்து, அதனை அவ்வனுபவ ஜன்னிய சம்ஸ்கார ரூபமான வாசனைக்கு விஷயமாக்கல் வேண்டும்.

மண்ணென்று பார்ப்பது பரமார்த்தமாம் என்பது, இரச் சுவைப் போல மண்ணையும், சுவர்ணங்களையும் அதிஷ்டானமாக ஒப்பியது ஸ்தூல திருஷ்டியால். சூட்சும திருஷ்டியால் விசாரித்துப் பார்க்கின், மண்ணை கடாதிகளின் அதிஷ்டானத் தன்மை பொருந்தாது. எப்படியென்றால் –

சித்தாந்தத்தில் யாதொரு கற்பித வஸ்துவும்,
அந்நிய கற்பிதங்களுக்கு அதிஷ்டானம் எண்ணல்

பொருந்தாது. பின்னையாதெனின்; –

**சேதனமே** சர்வத்திற்கும் அதிஷ்டானமாம். எப்படி இரச்சு உபகிதசேதனம் கற்பித சர்பத்திற்கு அதிஷ்டானமோ, அப்படி மண், சுவர்ணம் முதலிய தம் உபாதானங்களால் உபகிதமான சேதனம். கடம், குண்டலம் முதலிய காரியங்களுக்கு அதிஷ்டானமாம். ஆதலால், காரிய காரணங்களின் பேதம் கற்பிதம்.

வாஸ்தவம் அபேதமாம்.

ஆகையால், காரணமான மாயையின் நிவர்த்திக்கு நாம ரூபமான ஜகத்தின் திருஷ்ய விஸ்மரணரூப காரியத்தால் காரணமான மாயா சக்தி நிவர்த்தித்துப்போம் என்பதாம்.

**கைவல்யம் ச.தெ. கவி 105ல்**

காரணமிது, காரியமிதுவென்றும், பிராரத்தம் உள்ளளவில் காரியத் தோற்றம் அபாவமாகாதாகலின், அதனை மித்தை என்று அநாதரஞ்செய்து காரண மாத்திரமாய் அதாவது, "உனதான்மாவாய் நிற்கக் கடவாய்" என்று உபதேசத்தால் உணர்த்துகிறார்.

**ஞானங் காரண மறிபொருள் காரிய நாம ரூபப்பேய்கள்**
**ஆனதெப்படியழிந்த தெப்படியெனவாய்குதல் பலனன்றே**
**மான மைந்தனே தீர்க்க சொப்பன சகம் வந்ததும் பாராமல்**
**போன துந்நினையாமலுன் போதமாய்ப் பூரணமாயிருப்பாயே.**

**கருத்துரை:-** அறிவாகிய பொருள் காரணம். அறிப்படுவனவான பொருள்கள் காரியம். நாம ரூப காரியமான ஜகத், தீர்க்க சொப்பனமாய் (பிராதிபாஸிகசத்தாய்) இருப்பதால் பிராரத்தம்

உள்ளளவும் தோன்றிக் கொண்டிருக்கும். மாயையின் பரிணாமம், சேதனத்தின் விவர்த்தமாகிய ஜகத், கூடஸ்த நித்தியமாக இல்லாமல், பரிணாம நித்தியமாக இருக்கின்றபடியால், இன்ன காரணத்தினின்று இவ்வாறு உண்டாயிற்று என்பதையும், எப்படி வந்தது, எப்படி போனது என்றும், அத்தியந்தம் தோன்றாமல் என்ன உபாயத்தால் நிவர்த்தியாகும் என்பதையும் விசாரியாமல், பிராரத்தத்தால் பிரதிபந்திக்கப்பட்டுள்ள விட்சேப ரூபமான அஞ்ஞான அம்ஸமானது பிராரத்தம் உள்ளளவில் தக்த படம் போலத் தோற்றுவதால் யாதொரு உபாயத்தாலும் நிவர்த்தியாகாது.

ஆகையால், நாம ரூபமான ஜகத்தின் திருஷ்ய விஸ்மரண ரூப காரியத்தால் தான் காரணமான மாயா சக்தி நிவர்த்தித்துப்போம் என்பதை அறிந்து, தெளிந்து உனதான்மாவாய் பரிபூரணமாகிய பிரஹ்மமாயிருக்கக் கடவாய் என்பதாம்.

இப்படி மாயையிலிருந்து விடுபட்டு சொரூபத்தில் நிலைத்திருப்பவர்களும், திருஷ்யத்தில் வீழாதவர்களுமான பிரஹ்ம ஞானம் நிறைந்த ஜீவன் முக்தர்களின் இலட்சணம், பேதம், மற்றும் தாரதம்மியம் முதலியவைகளைப் பற்றி, தத்துவ விளக்கப் படலத்தில் கவி. 93, 94, 95, 98, 99, 100 முதலிய கவிகளில் கூறியிருக்கின்றார்.

## (மோக்ஷம்) முக்தி, ஜீவன் முக்தி

**முக்தி 2 வகை** = துக்க நிவர்த்தி, பரமானந்தப் பிராப்தி.

**முக்தியின் சொரூபம்** = சம்சார நிவர்த்தி, சொரூப அவஸ்தானம்

**முக்தி என்றால்** = பிறப்பு, இறப்பு என்ற சக்கரத்தில் இருந்து விடுபடுவதே முக்தி (மோக்ஷம்) ஆகும்.

**சம்சார நிவர்த்தி** : இந்த சரீரத்திலிருந்து வேறு சரீரத்திற்குச் செல்வதற்குக் காரணம் புண்ணிய, பாப கர்மங்கள், ஒவ்வொரு ஜீவனுக்கும் இந்த சம்சாரத்திற்குக் காரணமாக இருக்கின்றது. ஜீவித்திருக்கிற புருஷனுக்குக் கர்த்திருத்வாதி கிலேச ஏதுவாதலால் பந்தமாம். அவை நிவர்த்தியாதலே சம்சார நிவர்த்தியாம்.

**ஜீவன் முத்தி :** ஒவ்வொரு ஜீவனும் கா்மங்களை அழிப்பதன் மூலமாக சம்சாரத்திலிருந்து விடுபடுவது சா்வதுக்க நிவா்த்தி என்கின்ற மோக்ஷம்.

**ஜீவன் முக்தா்கள் :** தேகம் இருக்கும் போது கா்த்துருவ, போக்த்துருவமற்று பிரஹ்ம சொரூபத்தில் நிலைத்திருப்பவா்கள். பிரபஞ்சம் தோன்றிக் கொண்டிருக்க, அத்வைத சொரூபத்தில் நிலைத்திருப்பவா்கள் ஜீவன் முக்தா்கள்.

## ஜீவன் முக்தா்களின் இலக்ஷணம் :

கைவ : தத்துவ விளக்கம் – கவி – 98 –

**சென்றது கருதாா் நாளைச் சோ்வது நினையாா் கண்முன்**
**நின்றது புசிப்பாா் வெய்யினிலவாய் விண்விழுது வீழ்ந்து**
**பொன்றின சவம் வாழ்ந்தாலும் புதுமையாவொன்றும் பாராா்**
**நன்றுதீதென்னாா் சாட்சி நடுவான சீவன் முக்தா்.**

**கருத்துரை :-** பிரபஞ்சத்தில் மித்தியா புத்தியில் செல்காலத்தில் போனதைப் பற்றி நினையாா்கள். எதிா்காலத்தில் இனி வருவதைப் பற்றியும் நினையாா்கள். நிகழ்காலத்தில் கண்முன்னே பிராரத்த வலியால் வந்து நிற்கின்ற போகங்களை அனுபவிப்பாா்கள். சூாிய கிரணமான வெய்யிலானது சந்திர கிரணமான நிலவைப் போலச் சீதளமானாலும், ஆலவிருட்சத்திற் போல, ஆகாசத்தினின்றும் விழுதுகளிறங்கினாலும், மாித்துப் போன பிரேதம் பின் சீவித்ததானாலும் ஆச்சிாியமாக புதுமையாக ஒன்றும் பாா்க்கமாட்டாா்கள். ஒன்றை இது நன்றென்றும், மற்றொன்றை இது தீதென்றும் சொல்லமாட்டாா்கள்.

இந்த அத்வைத ஞானம் நிறைந்த ஜீவன் முக்தா்கள் நால்வா் ஆவா். அவா்கள், பிரஹ்மவித்து, வரன், வாியான், வாிட்டன் என நால்வா் ஆவா்.

ஜீவன் முக்தா்களின் பேதத்தையும், தாரதம்மியத்தையும் த.வி. கவி – 99ல் விளக்கியிருக்கின்றாா்.

ஜீவன் முக்தா்களின் பேதம். த.வி. கவி. 99

ஆகாயத்தை ஒப்பான **பிரஹ்மவித்து.**

வரன், வரியான் என்னும் இருவரும் சமாதியோகத்தை பொருந்தியிருப்பார்கள்.

தேகஸ்திதிக்கு இன்றியமையாத பிட்சை முதலியவற்றின் பொருட்டுத் தானாய் உண்ணுவோன் **வரனாகும்.**

அந்நியரான சீடர் முதலியோரால் உணர்பவன் **வரியனாகும்.**
அந்நியராலும், தன்னாலும் அறியாதவன் **வரிட்டனாகும்.**

**சீவன் முக்தர்களின் தாரதம்மியம் = த.வி. கவி - 100 -**

**அரிதாகும் இவர்கள் இவ்வாறு அநேகரானாலும் முத்தி**
**சரியாகும் பாடுபட்ட சமாதிக்குப் பலன் ஏதென்றால்**
**பெரிதான திருஷ்ட துக்கம் பிரம்மவித்து அநுபவிப்பன்**
**வரியானும் வரனும் மற்றைவரிட்டனும் சுகமாய் வாழ்வார்.**

**கருத்துரை :-** திரிலோகத்திலுங் கிடைத்தற்கு துர்லபமான இச்சீவன் முத்தர்கள் இந்தப் பிரகாரம் நாநா பேதமான வியவகாரங்களை உடையவராயிருந்தாராயினும், ஞானத்தில் தாரதம்மியமின்மையின், ஞான பலமான மோட்ச சுகம் அவர்களுக்கு தாரதம்மியமின்றிச் சமமாம். பிராரத்த வசத்தாலுண்டாகி நிற்கும். பெரிதாகிய (திருஷ்ட) பிரத்தியட்ச துக்கத்தை பிரஹ்மவித்து அநுபவிப்பன். வரனும், வரியானும் மற்றும் வரிட்டனும் சுகமாய் அதாவது, சீவன் முத்திச் சுகத்தினையே உடையவராய் வாழ்வார்கள். சீவன் முத்தர் நால்வர்க்கும் ஞானம் சமமாவதால், ஞான பலமான விதேக முத்தி சமமாம் என்றும், சித்த விசிராந்தி தாரதம்மியத்தால் சுகம் தாரதம்மியமாம்.

**பிரஹ்மவித்து இயல்பு கூறுகின்றார் :**

த.வி. கவி. 95

**தீரராய்ப் பிரம்ம வித்தாய்த் தெளிந்தவர் தெளியும் முன்னம்**
**வாரமாய் இருந்த தங்கள் வருணமாசிரமம் சொன்ன**
**பாரகாரியம் ஆனாலும் பலர்க்கு பகாரமாக**
**நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர் -**

**கருத்துரை :-** ஈசுவரனால் பராக்குகளாகச் சிருஷ்டித்த இந்திரியங்களை வேகமுள்ள நதிச்சலத்தைத் திருப்பினாற் போல, அகமுகமாக்கிச் சர்வ இந்திரியங்களுக்கும் ஆந்தரமான பரமான்மாவைச் சாட்சாத்கரித்து இருப்பதால், **தீரர்** என்றும், யாமார்! ஜகம் எத்தன்மைத்து! என்பன முதலிய கலக்கங்கள் கலங்க நீர் கதக ரேணுவாற் போல் பிரம்ம வித்தையால் தெளிந்திருத்தலால் **பிரம்மவித்தாய் தெளிந்தவர்** என்றும், ஆப்தகாமராதலால் தமக்கென்று செய்யாது, லோக சங்கிரகார்த்தம் வருணாச்சிரம விதிகளை விதிப்படி செய்வதால் **பலர்க்குபகாரமாக, நேரதாச் செய்வர்** என்றும், அந்நியரைச் சன்மார்க்கத்தில் பிரவிர்த்திப்பித்தற் பொருட்டுக் கர்மோ பாசனைகளைச் செய்யினும், பிரம்மம் நாம் என்னும் அநுபவம் க்ஷணமும் விடாமையின் **தீர்ந்த நிலைவிடார்** என்றும் கூறினார்.

சீவன் முத்தர்கள் நால்வரில் பிரம்ம வித்துதான் **தூய முத்தர்** என்று சந்தேகம் தெளிதல் கவி 154ல்

**முன்னிலங்களேறிய மூவரும் அப்பியாசிகளாம் முத்தரல்லர்**
**பின்னிலங்கள் வரன் வரியான் வரிட்டனென்னும் சீவன் முத்தர் பேதமாகுஞ்**
**சொன்ன நடுப்பூமி வந்த ஞானிகளே பிரம்மவித்தாம் தூய முத்தர்**
**இன்னமும் அப் பூமிகளின் பெருமைதனை நீயறிய யான் சொல்வேனே**

**தூய முத்தர் :** சுபேட்சை, விசாரணை, தநுமானசி என்னும் மூன்று பூமிகளில் ஏறியிருக்கும் மூவரும் அப்பியாசிகளாகும். சீவன் முத்தரல்லராம். அசம்சத்தி, பதார்த்த பாவனை, துரியமென்னும் பின் மூன்று பூமிகளில் ஏறியிருப்பவர்கள் வரன், வரியான், வரிட்டன் என்கின்ற சீவன் முத்தரின் வேறுபாடாம். சொல்லிய நடுப்பூமி வந்த சத்துவாபத்தி என்னும் மத்திய பூமியில் வந்த அறிஞரே பிரம்ம வித்தாகிய பரிசுத்த முத்தராம்.

பிரபஞ்சம் சத்தியமென்னும் புத்தியும், தேகம் தாம் என்னும் புத்தியும் மறந்தும் வாராமையின் பிரம்மவித்துவே **தூய முத்தராம்** என்று பிரம்மவித்தின மகிமையைக் கூறியிருக்கின்றார்.

சத்ரூபப் பிரஹ்மத்தில் மித்தியாவஸ்து
கற்பிதமாவதற்கு திருஷ்டாந்தங்கள்
கைவல்ய நவநீதம் – கவி – 108ல் (தத்துவ விளக்கம்)

**கானல் நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்பநகர் கனாவூர்**
**வான்மை கயிற்றில் பாம்பு மலடி சேய் முயலின் கோடு**
**பீனம் ஆம் தறிபுமானின் பிரபஞ்சம் எல்லாம் பொய்யே**
**ஞானம் மெய்மகனே உன்னை நம் ஆணை மறந்திடாயே**

சத்ரூபப் பிரஹ்மத்தில் மித்தியவஸ்து கற்பிதமவாதற்குத்
திருஷ்டாந்தம் ஒரே விதமாகச் சொல்லாமல்
பல விதமாகச் சொல்லுவது எக்காரணத்தால் என்றால் –

சச்சிதானந்தப் பிரஹ்ம (காரண)த்தில்
ஆரோபமான நாமரூப ஜக (காரிய)த்தை
அபவாதித்துக் காரணமான அதிஷ்டானப்
பிரஹ்மமே நீயென்னுங் குருவின் உபதேச
ஆரம்பத்தில் பிரஹ்மத்தில் பரஜீவ ஜகத்தின்

சத்தை, சொல்லும், தோற்றமும், பொருளும் எனக் காட்டத் தந்து படம், (நூல் வஸ்திரம்) மிருத்திகை கடம் (மண்குடம்) கனக குண்டலம் (பொன்னாபரணம்) முதலிய திருஷ்டாந்தமும், சொல்லும், தோற்றமும் எனக் காட்ட இரஜ்ஜீசர்ப்பம் (கயிறு பாம்பு), ஸ்தானு சோர (கட்டை கள்வன்), கானல் நீர், கிளிஞ்சில் வெள்ளி முதலிய திருஷ்டாந்தமும்,

சொல் மாத்திரம் எனக்காட்ட
வந்தியா புத்திரன் (மலடிமகன்)
ககன குசுமம் (ஆகாய புஷ்ப)
சசசிருங்காதிய (முயற்கொம்பா)
திருஷ்டாந்தமும், எல்லாரது அனுபவம்

எனக்காட்டச் சொப்பனவுலகம், சுழுத்தி முதலிய திருஷ்டாந்தமும் சொல்லப்படுகின்றன.

ஆகையால், இந்த அகங்காராதிப் பிரபஞ்சம் அனைத்தும் மித்தை. பிரஞ்ஞானகணப் பிரஹ்மமே சத்தியம். மைந்தா உன்னையும் இத்தன்மையான உனது ஆத்மாவையும் நம் மேல் சத்தியம். நீ மறவாதே என்று தன் மேல் சத்தியம் செய்து சொல்லியிருக்கின்றார்.

அய்யனே எனதுள்ளத்தில் எந்நாளும் கோயில் கொண்டிருக்கும் மெய்யனே உபதேசிக்க வெளிவந்த சத்குருவே

**ஸ்ரீ மஹா கோவிந்த சுவாமியே போற்றி! போற்றி!!**

உய்யவே முக்தியை நல்கும் நின் கருணைக்கு ஓர் உதவி செய்யுமாறு ஒன்றுங்காணேன் ஜீவன் முக்தனே, போற்றி

நின் அருளினால் எழுந்த இந்த மெய்யான கருத்துரைகளை நின் திருவடிக் கமலங்களில் ஆத்மார்த்தமாக ஆராதித்துப் பேரானந்தம் அடைகின்றேன்.

**ஓம் மஹா கோவிந்த சுவாமி நமோ நம :**

எந்நிலங்களிலுமிக்க எழுநிலம் அவற்றின் மேலான துரிய பூமியாகிய நன்னிலத்தில் எழுந்து அருள்பாலிக்கும் சத்குரு ஸ்ரீ நாராயண தேசிக ஸ்வாமிகள், சத்குரு ஸ்ரீ தாண்டவராய ஸ்வாமிகளின் திருப்பாத கமலங்களையும், உரை எழுதிய தவத்திரு ஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக ஸ்வாமிகளின் திருவடிகளையும் அடி பணிந்து வணங்குகின்றேன்.

ஹரி : ஓம்தத்ஸத்.

வாழ்க வையகம் வாழ்க வளமுடன்.

# அத்வைத ஞானாமிர்தத்தின் சில துளிகள்

ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:

அத்வைத சித்தாந்தத்தின் கண் முமுட்சுக்களுக்கு சுத்தான்ம கோசரப் பிரமையை விசாரிப்பதில் அனுகூலம் உண்டாகும் பொருட்டு இதனைக் கூறுவாம்.

**ஞான வர்ணனம்**

பிரஹ்மானந்தப் பிராப்திவடிவ மோக்ஷத்திற்கு
ஆன்ம அபரோக்ஷ ஞானமே முக்கிய சாதனம்.
இது அத்வைத சித்தாந்தம்.

விஷயங்களைப் பிரகாசிக்கும் அவித்தை அந்தக் கரணங்களின் பரிணாமத்திற்கு ஞானம் (விருத்தி) என்று பெயர்.

இது ஞானத்தின் பொது இலக்கணமாம். அது அனந்தப் பிரிவை உடையது.

ஸ்மிருதியின் வேறாய் வியாவகாரிய தசையில் பாதிக்கப்படாத பொருளை விஷயம் செய்யும் ஞானம் **பிரமை** எனப்படும்.

பிரமை வடிவினதும், அப்பிரமை வடிவினதும் என ஞானம் இரு வகைப்படும்.

இதில் பிரமை வடிவினதில் இரு வகைப்படும். அவை.

1. ஆன்ம கோசரப்பிரமை.
   (ஆன்மாவை விஷயம் செய்யும் ஞானம்)

2. அனான்மகோசரப்பிரமை
   (அனான்மாவை விஷயம் செய்யும் ஞானம்)

ஆன்ம கோசரப்பிரமை இருவகையாகும்.

1. விசிஷ்டான்ம கோசரப்பிரமை
2. சுத்தான்ம கோசரப்பிரமை

இதில், நான் கர்த்தா, போக்தா, ஞாதா என்றல் முதலிய பேதமாக உண்டாகும் ஞானம் விசிஷ்டான்ம கோசரமாம்.

நான் அசங்கன், சாக்ஷி, அகண்டன், சச்சிதானந்தன் என்றல் முதலியவாக நிர்விகார அகண்டான்மாவைப் பற்றி உண்டாகும் ஞானம் சுத்தான்ம கோசரப் பிரமை எனப்படும்.

பிரமைக்குக் காரணம் எதுவோ அது பிரமாணம் எனப்படும்.

பிரமாண ஜன்னிய ஞானம் பிரமையெனப்படும்.

அனான்ம கோசரப் பிரமை அறுவகை ஆகும். அவை :

1. பிரத்தியக்ஷப் பிரமையின் கரணம் **பிரத்தியக்ஷப்பிரமாணம்.**
2. அனுமிதிப் பிரமையின் கரணம் **அனுமானப் பிரமாணம்.**
3. சாப்திப் பிரமையின் கரணம் **சப்தப் பிரமாணம்.**
4. உவமிதிப் பிரமையின் கரணம் **உவமானப் பிரமாணம்.**
5. அர்த்தாபத்திப் பிரமையின் கரணம் **அர்த்தாபத்திப் பிரமாணம்.**
6. அபாவப் பிரமையின் கரணம் **அநுபலப்திப் பிரமாணம்.**

## பிரமாணங்களின் இலட்சணம்

### 1) பிரத்தியட்சப் பிரமாணம்

பிரத்தியட்சப் பிரமையின் கரணம் பிரத்தியட்சப் பிரமாணமாம். கட முதலியவற்றைக் காணுமிடத்து நேத்திர முதலிய இந்திரியங்களே பிரத்தியட்சப் பிரமாணமாம். இது கடம் என்றறியுமிடத்து நேத்திர இந்திரியம் பிரமாணமும், கடம் பிரமேயமும், அதன் ஞானம் பிரமையுமாம். இந்த பிரத்தியக்ஷஞானம் ஐந்து வகைகளில் பொருந்தியது.

1. இந்திரியங்களால் உண்டாகும் பாஹிய கடாதிகளின் பிரத்தியக்ஷ ஞானத்தில் பொருந்தியதாம்.
2. மஹா வாக்கியங்களால் உண்டாகும் பிரஹ்மத்தின் பிரத்தியக்ஷ ஞானத்தில் பொருந்தியதாம்.
3. ஆந்திரத்தில் பாஹிய நிமித்தங்களின்றி உள்ளேயே உண்டாகும் சுக, துக்கங்களின் பிரத்தியக்ஷ ஞானத்தால் பொருந்தியதாகும்.

4. மாயையின் விருத்தியாகிய ஈஸ்வர ஞானத்தில் பொருந்தியதாம்.
5. அவித்யா விருத்தியாகிய ரச்சு சர்ப்பாதிகளின் ஞானத்தில் பொருந்திய தாம்.

## 2) அனுமானப் பிரமாணம்

அனுமிதிப் பிரமையின் கரணம் அநுமானப் பிரமாணமாம். இலிங்க ஞானத்தால் தோன்றும் ஞானம் அநுமிதியாம். மலையில் புகையின் பிரத்தியட்ச ஞானம் முன்புள்ள இடத்துத் தீயின் ஞானம் உண்டாகிறது. புகையின் ஞானம் இலிங்க ஞானமாம். இது அநுமானப் பிரமாணமாம் அதனால் உண்டாகும் வன்னியின ஞானம் அநுமிதியாம் அவ்வனுமானம் பிரதிஞ்ஞை, அவயவங்களை யுடையதாம். வருமாறு :

இம்மலை தீயுடைத்து என்பது பிரதிஞ்ஞை
புகையுடைமையால் – ஹேது
அடுக்களைப் போல என்பது – திருஷ்டாந்தம்
இவ்வனுமானம் 5 வகைகள்
அவை
பக்ஷம் – பர்வதம், சாத்யம் = நெருப்பு
ஹேது – புகை, வியாப்தி = புகைக்கும் நெருப்புக்கும்
உள்ள சம்பந்த ஞானம்.

எங்கெல்லாம் புகை இருக்கிறதோ, அங்கெல்லாம் நெருப்பு இருக்கிறது என்ற அறிவு.

திருஷ்டாந்தம் : யாக சாலை, மடப்பள்ளி (சமையல் அறை) வேதாந்த வாக்கியங்களால் ஜீவனிடத்துப் பிரஹமத்தின் அபேதம் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அது அனுமானத்தாலும் பெறப்படுகின்றது.

**அனுமானமாவது :-**

ஜீவன் பிரஹ்மா பின்னன் சேதனத்துவத்தால் எங்கே எங்கே சேதனத்துவமுண்டோ அங்கே அங்கே பிரஹ்மா பேதமுண்டு. பிரம்மத்தில் போல இங்கே

ஜீவன் – பக்ஷம்
பிரஹ்மாபேதம் – சாத்யம்
சேதனத்வம் – ஹேது
பிரஹ்மம் – திருஷ்டாந்தம்

## 3) உவமானப் பிரமாணம்

உவமிதிப் பிரமையின் கரணம் உவமானப் பிரமாணம் நகரத்தில் கோவியக்தியை (ஆவின் பிண்டத்தை)க் காண்பவன் வனத்தில் சென்று கவயத்தை (காட்டு பசுவை) க் காணுமிடத்து அவனுக்கு இப்பசு ஆவையொத்தது என்னும் பிரத்தியட்ச ஞானம் உண்டாகிறது. அதன்பின் என்ன இப்பசுவை யொத்ததாம் என்னும் ஞானம் உண்டாகிறது. ஈண்டுக் கவயத்தில் ஆவின் ஒப்புவமையின் ஞானம் உவமானப் பிரமாணமும், ஆவில் கவயத்தின் சாதிருசிய ஞானம் உவமிதியாம்.

(பேத சகித சமான தருமம் சாதிருசியமெனப்படும்)

## 4) சப்தப் பிரமாணம்

சாப்திப் பிரமையின் கரணம் சப்தப் பிரமாணமாம் யதார்த்தத்தினைக் கூறுவோன் வாக்கியம் சப்தப் பிரமாணமாம். அதனால் உண்டாகும் ஞானம் சாப்திப் பிரமையாம். ஈண்டு ஈஸ்வரனால் சொல்லப்பட்ட வேதங்களும், அவற்றை மூலமாக உடைய சாஸ்திரங்களும் பிறவும் சப்தப் பிரமாணங்களாம்.

**சப்தப் பிரமாணம், சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் தத்துவமஸி என்ற மகாவாக்கியத்தின் மூலமாக ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம் கூறப்படுகின்றது**

இந்த மகா வாக்கியம் சமதமாதி சகிதபுத்திக்கு எட்டும் சமதமாதி ரகித புத்திக்கு எட்டாது.

## 5) அருத்தாபத்திப் பிரமாணம்

அருத்தாபத்திப் பிரமையின் கரணம் அருத்தாபத்திப் பிரமாணமாம். உபபாதக கற்பனைக் கேதுவாகிய உபபாத்திய ஞானம்

அருத்தாபத்திப் பிரமாணமாம். உபபாதக ஞானம் அர்த்தாபத்திப் பிரமையாம். எதின்றி எது சம்பவியாதோ அதற்கு அது உபபாத்தியம் எனப்படும்.

இராத்திரி போஜனமின்றிப் பகலில் உண்ணாப் புருடனிடத்துப் பருமை சம்பவியாதாலின் இராத்திரி போஜனத்தின் உபபாத்தியம் (சம்பாத்தியம்) ஸ்தூலத் தன்மையாம். எதன் அபாவத்தால் எதன் அபாவமுண்டாகின்றதோ, அது அதன் உபபாதகமாம். இராத்திரி போஜனத்தின் அபாவத்தால் பகலுண்ணாதவனுக்கு ஸ்தூலத் தன்மையின் அபாவமிருத்தலின் இராத்திரி போஜனம் ஸ்தூலத் தன்மையின் உபபாதக (சம்பாத) மாம். இங்ஙனம் உபபாத்தியத்தின் அனுபபத்தியின் ஞானத்தினால் உபபாதகத்தைக் கற்பித்தல் அருத்தாபத்திப் பிரமையாம். உபபாதகக் கற்பனைக் கேதுவான உபபாத்தியத்தின் அனுபபத்தி (பொருந்தாமை) யின் ஞானம் அருத்தாபத்தி பிரமாணமாம்.

அருத்தாபத்தி என்பது அர்த்தஸ்ய ஆபத்தி எனப் பிரிபடும். அதன் பொருள் அர்த்தத்தின் கற்பனை என்பது.

## 6) அனுபலப்தி (அபாவ)ப் பிரமாணம்

அபாவப் பிரமையின் கரணம் அநுபலப்திப் பிரமாணமாம். அபாவத்தின் யதார்த்த ஞானம் எதனால் உண்டாகிறதோ அது அனுபலப்திப் பிரமாணமாம். ஈண்டுக் கடமில்லை என்னும் இடத்து அதற்குக் கடம் விளங்காமையே அனுபலப்திப் பிரமாணமாம் உபலப்தி விளக்கம் அனுபலப்தி – விளங்காமை

சம்பவம், ஐதிகம் என்ற தொடக்கத்துப் பிரமாணங்களும் இவ்வாறினுள் அந்தர்க்கதமாம். இவ்வாறு பிரமாணங்களின் நிரூபணம் மிகச் சுருக்கமாகச் சொல்லப்படுகிறது.

ஸ்மிருதி, பிராந்தி, சமுசயம் என்னும் இம்மூன்றும் ஆபாஸ சகித அவித்தையின் விருத்தி வடிவங்களாம். பிரமை அவித்தியா விருத்தியன்று அந்தக் கரணவிருத்தி வடிவமாம்.

## சுத்தான்ம கோசர சுத்த சத்துவ மனமும் மஹா வாக்கியமும்

தத்துவமஸி முதலிய மஹாவாக்கியங்கள் பாகத்தியாக லக்ஷணையால் அறிவிக்கும் இலக்ஷியார்த்த வடிவ பிரத்தியக்க பின்ன பரமாத்மாவே சுத்தான்மாவாகும். இவ்வகண்ட சைதன்யத்தின் ஞானம் எதுவோ, அது சுத்தான்ம கோசரப்பிரமை எனப்படும்.

**சங்கை** : பிரமாணத்தால் உண்டாகும் ஞானம் பிரமை எனப்படும். இங்கு சுத்தான்ம கோசரப் பிரமைக்கு எப் பிரமாணத்தை அங்கீகரிக்கக்கூடும் ?

**சமாதானம்** : குரு ஈஸ்வரப் பிரசாதத்தோடு மஹாவாக்கிய விசாரத்தால் துணிந்த அர்த்த சம்ஸ்காரத்தையுடையதும், ஞானபூமியின் அப்பியாச பலத்தால் சவிகற்ப சமாதி பரியந்தம் சென்றதுமான சுத்த சத்துவமனமே கூறிய சுத்தான்ம அபரோக்ஷ சாக்ஷாத்காரத்திற்குக் காரணமாவதால் அம்மனமே சுத்தான்ம கோசரப் பிரமைக்குக் கரணமாம் (பிரமாணமாம்). மஹாவாக்கியம் அவ்வபரோக்ஷ ஞானத்திற்கு சககாரி காரணமாம். இங்கு சாக்ஷாத்காரம், அபரோக்ஷம், பிரத்தியக்ஷம் என்பன ஒரு பொருளைக் குறிக்கும் சொற்களாம்.

**சங்கை** : ஆத்ம அபரோக்ஷம் பிரத்தியக்ஷமேயாகும். அந்தப் பிரத்தியக்ஷப் பிரமைக்கு பிரத்தியக்ஷப் பிரமாணங்களான சுரோத்திராதி இந்திரியங்களில் யாதேனும் ஒன்றிருக்கின் தகுதியாம். இங்ஙனம் இருக்க தனியே ஓர் பிரமாணம் கூறுவது எங்ஙனம் பொருந்தும் ?

**சமாதானம்** : பிரத்தியக்ஷப் பிரமாணம் சுரோத்திராதி இந்திரியங்களேயாயினும், அவை பூதக்காரியங்கள் ரூபாதிகளின் ஞானமே அவைகளுக்கு உண்டாகும். ஆத்ம பிரத்தியக்ஷ விஷயத்தில் அவைகள் சிறிதும் பயன்படாவாம். இங்கு சுத்த சத்துவ மனதை கரணம் என்றது பிரமாணம். இந்திரியம் அன்று.

ஆன்ம அபரோக்ஷ ஞானத்திற்குச் சிலர் மனம் பிரமாணம் என்றும், சிலர் மஹாவாக்கியம் என்றும், இன்னும் சிலர் விசாரத்தோடு

கூடிய மஹா வாக்கியம் என்றும் ஒப்பியிருக்கின்றனர். ஆயினும், மஹாவாக்கியத்தைப் பிரமாணமாகவும், சமதமாதி சாதனங்களோடு கூடிய மனதை சககாரியாகவும் ஒப்பியிருக்கின்றனர்.

இதுமிக்க சிரேஷ்டமெனினும், இங்ஙனம் கூறும் நூல்களை குருமுகமாக நன்கு விசாரித்து அறியாத சிலர் சப்தத்திற்கு இது சுபாவம்; அபரோக்ஷத்தை போதிக்கும் வாக்கியம் சுரோத்தியத்திற்கு எட்டிய மாத்திரம் அந்தக்ஷணமே அபரோக்ஷஞானம் உண்டாகிவிடும் என்றும், அதற்கு தசம திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றனர். அது எங்ஙனமெனின், அங்கு வந்த ஆப்தன் ஒன்பது பேரையும் எண்ணிய பத்தாமவன் நீ என்று பத்தாமவனைப் பார்த்துக் கூறிய மாத்திரத்தில் நான் பத்தாமவன் என்று தசமன் தன்னை உணர்வது போலவாம் என்று கூறுகின்றனர்.

இந்தக் கூற்று பொருத்தமுடையது அன்று. ஏனெனில் பத்தாமவன் தன்னை நன்கு உணர்ந்து இருக்கின்றான். புதிதல்ல.

பிரத்தியக்ஷ வஸ்துவை அடிக்கடி அனுபவித்த ஒருவன் ஒருகால் பிரமாதத்தால் அவ்வஸ்துவை மறந்துவிடின், பின் சப்தத்தாலோ, மற்ற எவ்வகையாலோ, பிரமாதா நீங்கிய உடனே தாமதமின்றி அதனை பிரத்தியக்ஷமாக அறிதல் கூடும். அதுபோல், சச்சிதானந்த வடிவ தன் சொரூபத்தை முன் எக்காலத்திலேனும் அஞ்ஞானி ஜீவன் அனுபவித்ததுண்டா? அன்றியும் பத்தாமவன் தன்னை அறிவதில் ஆப்தனது வாக்கியமே பிரமாணம் என்பதில் விவாதமுண்டு.

**எப்படியெனில்** :- ஆப்தன் நீ பத்தாமவன் என்று கூறின், உடனே கேட்டவன் மற்றெங்ஙனமெனின் அவ்வாக்கியத்தை சககாரியாகக் கொண்டு தன் நேத்திரத்தால் நண்பர்களைச் சாவதானமாக ஒன்று, இரண்டு, மூன்று என்ற முதலாக ஒன்பது பேரையும் எண்ணிப்பார்த்துப் பின் தன்னைப் பத்தாமவனாக அறிகிறான். அங்ஙனமின்றி, ஆப்தனது வாக்கிய மாத்திரத்தால் தன்னை அறிவதில்லை.

ஆகையால், நேத்திரம், துவக்கென்னும் இரண்டு இந்திரியங்களும் இன்றிய புருஷனுக்கு பத்தாமவன் நீ என்ற

வாக்கியத்தைக் கேட்டலால் நான் பத்தாமவன் என்ற பிரத்தியக்ஷ ஞானம் பத்தாமவனுக்கு உண்டாவதில்லை.

எங்ஙனம், தசம பிரத்தியக்ஷத்தில் நேத்திரம் பிரமாணமும், வாக்கியம் சககாரிமாகின்றதோ, அங்கனமே, சுத்தான்ம பிரத்தியக்ஷத்தில் சுத்த சத்துவ மனம் பிரமாணமும், மஹாவாக்கியம் சககாரியாம்.

**சங்கை:** சுருதியில் மனத்தோடு கூட வாக்கும் எப் பரமாத்மாவிடம் செல்லாமல் திரும்புகின்றன என்று கூறியுள்ளது. இவ் வேத வசனத்தால் வாக்கு, மனம் இரண்டிற்கும் பிரம்மம் விஷயமன்று எனத் துணியப்படுகிறது. அங்ஙனம் இருக்க மனதிற்கு பிரம்மம் விஷயமானது என்பது விருத்தமன்றோ?

அங்கனமின்றி, வாக்குக்கும் விஷயமாகும் என்று ஏன் ஒப்பலாகாது?

**சமாதானம் :** தத்துவமஸி முதலிய மஹாவாக்கியங்கள் சக்தி விருத்தியால் நேரே பிரம்மத்தை விஷயம் செய்வதில்லை. விசிஷ்டமான ஜீவேஸ்வரரை அர்த்தத்தால் போதிக்கின்றன. மஹா வாக்கியங்கள் லக்ஷணா விருத்திகளால் பிரத்தியக்கபின்ன பிரம்மத்தை அறிவிக்கின்றன என்பர். அதுவும் உபச்சாரமேயாகும். இதனை ஒரு திருஷ்டாந்தத்தோடு விளக்குகிறார்.

எங்ஙனமெனில், ஓர் வியாபாரி கன்னலை (வெல்லத்தை)ப் பற்றி வாங்க வந்தவரிடம் கன்னலின் ருசியைப் பற்றி மிகவும் பிரமானித்தார். அது உண்மையெனினும், வந்தவர் வியாபாரி கூறிய வார்த்தையோடு நின்றுவிடாமல் வெல்லத்தை நாக்கில் இட்டுப் பார்க்க இச்சித்தனர். அதைக் கண்ட வியாபாரி சிறிதளவு அவரிடம் கொடுத்துவிட்டுத் தான் யாதொன்றும் பேசாமல் இருந்தார். வாங்குபவர் அதனைத் தின்று ருசிபார்த்தனர். அப்போது இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்த பிறகே வெல்லத்தின் இனிமை உள்ளவாறு வந்தவருக்கு விளங்கியது. ஆனால் முன் வியாபாரி கூறியது உண்மையாயினும் அப்போது நன்கு விளங்கவில்லை.

இது போன்று ஈஸ்வர, குரு, சாஸ்திரக் கிருபையால் அதிகாரிகளுக்கு பிரம்மத்தைப் பற்றி அதிகப் பிரவாத்தோடு போதித்தாலும் அதிகாரி அவ்வளவில் திருப்தியடைய முடியாது. ஏதெனில், அவ்வாக்கியங்கள் எவ்வளவு தர்க்க யுக்திகளோடு இலக்ஷணா விருத்தியால் அறிவிப்பதாயினும் அதிகாரியின் மனம் பக்குவமின்றியதால் எந்தப் பயனும் ஏற்படாது.

அக்கினி தகிப்பதில் எவ்வளவு சாமர்த்தியம் உடையதாயினும் வாழைத் தண்டை எங்ஙனம் தகிக்காதோ, அங்ஙனமே மல, விக்ஷேபமுடைய மனதிற்கு எத்தனை மஹா வாக்கியங்களைக் கேட்டும் எந்தப் பயனும் இன்றியதாம்.

பின் வாக்கியத்தால் யாது பயன் எனில்,

நிஷ்காமிய கர்மத்தாலும், ஈஸ்வர உபாசனையினாலும், மல விக்ஷேப தோஷம் நீங்கி சகல நற்குணங்களையும் பொருந்திய அதிகாரி நல்ல ஆசிரியரை அணுகி, தனது துக்க நிவர்த்தியின் பொருட்டு விதிபூர்வமாக வினவுவனாயின், ஆசிரியர் சம்சார துக்க நிவர்த்திக்கு சாதனமான மஹா வாக்கியத்தை அவனுக்கு உபதேசிப்பார்.

அவ்வாக்கியமான தீபாக்கினி அவன் மனமாகிய கற்பூரத்தில் பற்றிக்கொள்ளும். அம்மனம் ஆவரணமாகிய இருளைப் போக்கித் தானும் சாந்தியடையும். அதுபோல, சுத்தசத்துவ மனமாகிய அஹம்பிரஹ்மாஸ்மி என்ற அகண்டாகார விருத்தியானது அஸத்வ அபான ஆவர்ணத்தை பங்கமாக்கிய உடனே விருத்தி உபகித சேதனமும், விஷய உபகித சேதனமும் அபேதமாகி பிரஹ்மசைதன்யம் சுயம் பிரகாசமாய் பிரத்தியக்ஷமாக விளங்குகிறது.

இவ்வாறு, மஹாவாக்கியம் சக்தி விருத்தியால் பிரஹ்மத்தை அறிவிக்காமல், லக்ஷணா விருத்தியால் **சுத்த சத்துவ மனத்தை** அபேட்சித்து விஷயம் செய்வதால் சுத்தான்ம அப்ரோக்ஷ சாக்ஷாத்காரத்திற்கு **சுத்த சத்துவ மனமே** கரணமாவதால் அம்மனமே சுத்தான்ம கோசரப் பிரமைக்குக் காரணமாம் (பிரமாணமாம்) மஹாவாக்கியம் சககாரியாம்.

**சங்கை** : காரியத்திற்கு எது உபதான காரணமோ அது, அக்காரியத்திற்குக் கரணமாவதில்லை. அவ்வுபாதானத்தின் வேறான மற்றொன்றே கரணமாகின்றது. அது எவ்வாறென்றால், கடரூப காரியத்திற்கு மண் உபாதான காரணம். அவ்வுபாதான காரணமான மண் அக்கடரூப காரியத்திற்குக் கரணமாகாமல் அதனின் வேறான சக்கராதிகளே கரணமாகின்றன. அதுபோல், மனம் பிரமான, அப்பிரமான ஜன்னியங்களான பிரமை, அப்பிரமை வடிவ சகல ஞானங்களுக்கும் மற்றும் காமம், சங்கல்பம் முதலிய விருத்திகளுக்கும் உபாதான காரணமாயிருப்பது பிரசித்தம்.

இவ்வுபாதான காரணமான மனம், பிரஹ்ம வித்யா ரூப ஞானத்திற்குக் கரணமாமென்பது எங்ஙனம்?

**சமாதானம்** : கூறிய திருஷ்டாந்தத்தால் கூடாதெனினும், மற்றும் உபாதான காரணமே கரணமாம் என்பதில் அநேக திருஷ்டாந்தங்கள் உண்டு. அவைகளில் ஒன்று,

தகடு, ஆணி முதலிய சாமான்களால் இரும்புப் பெட்டி செய்கின்றனர். அப்பெட்டிக்குரிய சாமான்களுக்கு எல்லாம் இரும்பே உபாதானமாகும். அப்பெட்டியைச் செய்து முடிக்க வேண்டிய கரணங்களான ஆகர், சம்மட்டி முதலியுவைகளும் இரும்பேயாகும். இங்கு பெட்டிய முதலிய காரியங்களுக்கு உபாதான காரணமான இரும்பே சம்மட்டி முதலிய கரண வடிவமாகவும், இருத்தல் போல, சகல விருத்திகளுக்கும் உபாதான காரணமான மனம் ஆத்ம அபரோக்ஷ ஞான ரூப காரியத்திற்குக் கரணமாதல் கூடும்.

இங்கு இரும்பு ஒன்றே சகலமுமாய் இருப்பதாகக் கூறினும் பேதமுண்டு. எப்படியென்றால், உபாதானவடிவ இரும்பும், காரிய வடிவ இரும்பும் சமானத் தன்மையுடையனவாம். கரண வடிவ சம்மட்டி உருக்கால் முடிந்தவையாகலின் வேற்றுமையுண்டு. அதுபோல், மனம் ஆத்ம ஞானம் ஒழிந்த மற்றவைகளில் காரியப்படும் பொழுது வியாபகமாயும், உறுதியற்றதாயும் விளங்குகிறது. ஆத்ம ஞான கரண வடிவத்தால் அதி நுண்மையும், சூட்சுமமாயும் எவ்வுலகத்தும் தன்னில் நிகரில்லாத உறுதியும் பெற்று விளங்குகிறது. இவ்வுறுதியின் கெம்பீர நிலையைச் சாஸ்திரங்களிலும் கூறியுள்ளது. அது எப்படியென்றால்,

அதிசீதளமான, அதிக உறுதியான சத்துவ மனத்திற்கு இவ்வுலகின் விஷயங்கள் யானைக்கு ஆவின் குளம்படி ஜலம் போல் தோன்றும். உறுதியற்ற அல்பமனத்திற்குச் சிறிய விஷயங்கள் ஆயினும் ஆவின் குளம்படியின் ஜலம் மசகத்திற்குத் தாண்டமுடியாத சமுத்திரமாதல் போலும் தோன்றும். இவ்வாற்றால் சகல விருத்திகளுக்கும் உபாதான காரணமான மனம் ஆத்ம அபரோக்ஷ ஞான ரூப காரியத்திற்குக் காரணமாதல் கூடும்.

**வந்ததோர் இவ்வாநந்த மகிழ்ச்சியாருடன் சொல்வேன் யான்**
**சிந்தையில் எழுந்து பொங்கிச் செகம் எல்லாம் நிறைந்து தேங்கி**
**அந்தம் இல்லாதது ஆயிற்றப்படி குரு வேதாந்த**
**மந்திரம் அருளும் ஈசன் மலர்அடி வணங்கினேனே.**

பிரஹ்ம வித்தையால் உண்டானதான ஒப்பற்ற இவ்வித்தியானந்தத்தின் மகிழ்ச்சியை யான் யாருடன் சொல்வேன். புத்தி விருத்தியின் கண் உதயமாகி மேலிட்டு செகத்தின் அனைத்தினும் வியாபித்துப் பூரணமாய் அந்தம் இல்லாததாயிற்று. அப்படிப்பட்ட வித்தியானந்தத்தை அருளும் பிரஹ்ம நிஷ்டரையும், வேதாந்த வாக்கியங்களையும் அருளும் ஈசன் குருரூபமாகவும், வேதாந்த வாக்கிய ரூபமாகவும் இருந்து, அருளுகின்ற சர்வஞ்ஞ சிகாமணியாக ஈசுவரனுடைய மலர் போலும் உன் திருவடியையும் பணிந்தேனே.

ஹரி: ஓம் தத் ஸத்

வாழ்க வையகம் வாழ்க வளமுடன்

உ

# மகா கோவிந்த சுவாமிகள் போற்றி

ஆசி செய்சிவ நாதன் தனாதருள்
ஆகி வந்துதி பேரா டிகீலக
ஆலை மண்டிய ஊர்ரா ஜபாளையம் பிறந்தாரே
ஆசை நன்மக நீய ழகார்திரு
மாதைக் கைப்பிடி வாழீ எனாதுரை
ஆணி குத்திய காதாய்ப் படாரெனப் பறந்தோடி

தேசி கர்மடம் சீர்கோ விலூரினை
மேவிச் சென்றவர் காவி கொடாயென
வேத சொல்படி ஞான மகாவழி துறவாகி
தேனை ஒப்பன வேத பனூல்களை
தேறு வித்தவர் நாலு கலாமொழி
தேடிக் கற்றிட மாரி ஷிகேசமும் உடனேகி

காசி புண்ணிய மாந கரானதில்
காலம் ஒன்றுடன் ஓதி சிதானவர்
காரை நன்குடி ஆனந் தரானவர் வரலாகி
காணி நன்னிலம் ஆதி விழாவெடு
ஏக அம்பரம் ஊரின் மடாலயம்
பாலை யஞான தேசி சுவாமிகள் மடங்காத்து

வாசி கொப்பம மாந கராமதில்
வாழ எண்ணினர் தேன வநீதமும்
வாழை யின்கனி போல மகாவுரை விரிவாக!
வாடை பொன்றிட ஆடிப் ரஜோத்பத்தி
நாலு பத்தினில் வாரு சமாதியில்
வாசம் செய்மகா கோவிந் தசாமிதாள் பணிவோமா!

போற்றிப்பாடல் : **கொ.பூமிநாதன்**